## பாடல் எண் : 1

ஓம் கணபதி ஓம் கணபதி ஓம் கணபதி ஓம்
ஓம் கணபதி ஓம் கணபதி ஓம் கணபதி ஓம்

ஓங்குநன்மறை ஆகமங்களும் ஓதிடும் பொருளே
பாங்கொ டுன்திருப் பாதபங்கயம் பரவிடற்கருளே (ஓம்)

ஆக்கல் அளித்தல் அழித்தல் மறைத்தல் அருளல் செய்பவனே
போக்கு வரவில் லாநிலையினில் புக அருள்பவனே (ஓம்)

வாக்கும் மனமும் செயலும் தூயவாய்வயங்கச் செய்தருள் வாய்
நோக்கம் உள்முக மாக்கியே நடு நுதலொளி யருளவாய் (ஓம்)

சூழ்பவம் விலக் கித்திருவருள் சொரிந்திட வருவாய்
ஏழ்வகைப்பிற விக்கடல்கடத்திட எழுந்தருள்வாய் (ஓம்)

## பாடல் எண் : 2

எந்தன் வினை தீர்த்தவனே என்னையாட் கொண்டவனே
சிந்தைதனிலே உரைத்த சிற்பரக் கணபதியே

தந்திமுகம் இலங்கச் சதுர்ப்புயங்கள் துலங்கத்
தொந்திவயிறு குலுங்கத் துதிக்கை உலாவி வர

முக்கண்ணுடையவனே மும்மதத்துக் குஞ்சரனே
சிக்கறுத்த தூயவனே சித்திபுத்தி நாயகனே

மூஷிக வாகனனே முக்திக் கனுகூலனனே
நேசமுடன் அன்பருள்ளம் நிறைந்த பரிபூரணனே

பந்தம் அறுத்தவனே பாசம் ஒழித்தவனே
கந்தனுக்கு முன்னவனே கலிதன்னைத் தீர்த்தவனே

வல்லபை மணவாளனே வரமருளும் தேசிகனே
பல்லாயிரங் கோடியண்டம் படைத்தளிக்கும் ஐங்கரனே

மூவர்களை யுண்டுபண்ணி முத்தொழிலும் ஈந்தவனே
தேவகுருவாக வந்து தேவர்களைக் காத்தவனே

திரிபுரம் எரிப்பதற்கு சிவனுக்குபதேசித்தவா
அரிபிரம்மாதிகட்கும் அதீததமாய் நின்றவனே

விஷ்ணுபுத்ரி பன்னிருவர் வேட்டதிரு மணவாளனே
துஷ்டசன நிக்ரகனே தூயசிஷ்ய பரிபாலனே

நீதியில்லாக் கலியுகத்தில் நின்னடிமை யானதன்பின்
சோதனைகள் செய்யாதே சூட்சமுள்ள என்குருவே

வேதங்களுக் கெட்டாத விசித்திரத்தைக் காட்டிவிட்டுச்
சோதனைக்கும் எட்டாது சூட்சமமதாய் நின்று கொண்டாய்

எல்லையற்ற காட்சிதந்து எமனுக்கிடமில்லாமல்
பல்லுயிருங் காட்சிகொள்ளப் பலனளித்த சின்மயமே

மாகர்த்தன் மாயோகி மாதியாகி யென்று சொல்ல
ஏகப்பிரம்ம வீடளித்த என்னுளொளிர் பரஞ்சுடரே (எந்தன்)

## பாடல் எண் : 3

பல்லவி

பேரும் ஊரும் தெரியாப் பெருமானே உனைக் காணும்
பேறெனக் கருள்வாயோ? (பேரும்)

சரணம்

சீரும் சிறப்பும் மிக்க திருவும் பல கலையும்
ஏரும் இளமையும் வே றெதுவும்கோ ராமல் நின்று (பேரும்)

நேரும் நிகழ்ச்சி யெல்லாம் நின்விளை யாடல் என்றே
நீருண்ட மேகம் போன்ற நின்னரு ளைவ ழுத்தி (பேரும்)

நீரும் நிலமும் காற்றும் நெருப்பும் விண்ணும்போல் என்னுள்
போருண்ணும் புலன் களைப் பொசுக்கி மௌனத்துள் மூழ்கி (பேரும்)

பாரில் கசந்திடும் வேப்பங்காயும் பழுக்குங்கால்
சேரும் இனிப்பை என்றால் சிறியேன் பாழாவ துண்டோ? (பேரும்)

## பாடல் எண் : 4

பல்லவி

கோபம் செய்யாதே மனமே – கோபம் செய்யாதே

அநுபல்லவி

கோபஞ்செய்தால் பாபங்கள் நேர்ந்து
குற்றம்வந் தெய்துனைச் சற்றும் விடாது (கோ)

சரணம்

பாசக்கடலை அகற்றிக் கொடும் பாழ்வினைகளைத் துரத்தி
நேசித்து அரனை மனதில் தினமும் நினைந்து நினைந்து திருத்தி (கோ)

தாய் வயிற்றினில் பிறந்து நல்ல சன்மார்கங்களை அறிந்து
மாய்கை யென்றிங்கே தெரிந்து மனம் வாடுவதேன் மதிமறந்து (கோ)

உன்னைப் படைத்தவ னாரு உனக்குள்ளே இருக்கிறான்பாரு
சொன்ன படியே நீ தேரு சிற்சொரூப நிலையை நீ சாரு (கோ)

மூடர்கள் எத்தனை கோடி பல மூர்க்கர்கள் எத்தனை கோடி
பாடி யிருப்பவர் கோடி பணந் தேடியிருப்பவர் கோடி (கோ)

## பாடல் எண் : 5

இரெட்டியப்பட்டி ஆண்டவரே இரத்தின சிம்மா சனபதியே
தீரா வினைகளைத் தீர்ப்பவரே செகத்திற் குருவாய் நின்றவரே
சுத்தசன் மார்க்க நெறியினரே தொல்புவி யாள வந்தவரே
உலகந் தழைக்க வந்தவரே உத்தம புருடர்க்கு நாயகரே
பூமி தழைக்க வந்தவரே புண்ணிய புருடருக்கு நாயகரே
சகல மதங்களின் சம்மதரே சகல கலைக்கும் வல்லவரே
இராஜநீதி தெய்வநீதி யிவைநிலை மைகள் தவறாதவரே
பேரானந்த முடையவரே பேரின் பானு சுகவமுதே
பேரானந்தங் காட்டவல்ல பேரின்பவெள் ளக்கடலே
எங்கும் நிறைந்த பூரணரே யெல்லோருக்கும் நாயகரே
பக்தரைக் காக்க வல்லவரே பாவ வினைகளைத் தீர்ப்பவரே
நித்தியா னந்த நிட்களரே நேர்மையுள் ளோர்க்கு நாயகரே
துட்டநிக் ரகசிட்ட பரிபாலனஞ் சுகமாய் நடத்த வந்தவரே
அறிவில்லாத மானிடருக்கு அறிவு கொடுக்க வந்தவரே
தெரியாத மானிடர்க்குத் தெளிவு படுத்த வந்தவரே
அன்பர் மனதி னருகிருந்தே ஆடுங் கருணைப் பரஞ்சோதி
பக்தர்களைச் சோதிக்கப் பல வேடங்கள் பூண்டவரே
பக்தியுடைய புண்ணியர்க்குப் பக்தி காட்ட வந்தவரே
அன்புக் குரிய மாதவர்க்கே ஆனந்தங் காட்ட வல்லவரே
பரம பதத்தை கொடுப்பவரே பாவ வினைகளைத் தீர்ப்பவரே
பிறவிப்பிணியை நீக்கவந்த பெருஞ்செல்வத்தின் பெருமானே.

## பாடல் எண் : 6

பல்லவி

ஈசா எனக்குவரம் தாராய் - இது சமயம்
ஈசா எனக்குவரம் தாராய்

அனுபல்லவி

பாசக் கடலில் விழுந்து ஆசைப்படும் வினையால்
மோசப் படாமல்என்னை நேசித் தருள்உகந்து (ஈசா)

சரணம்

ஆதி யினில் செனித்த காலம் இதுவரையில்
ஓதிப் படித்த கல்வி ஏதுக்கு உதவி இனி (ஈசா)

கும்பிக்(கு) இரையே தேடிக் கூவித் திரிந்தேன் இந்நாள்
நம்பிக்கை போகும் காலம் நான் இங்கிருப்பதில்லை (ஈசா)

கள்ளர் திருடர்தம்மை கைக்கொள்ளும் காலமதில்
வள்ளல்என்ற பேர்ஏது வையகத்தில் யாரும் இல்லை (ஈசா)

## பாடல் எண் : 7

பல்லவி

வந்ததை ஒப்புக் கொள்வாய் - மனமே
வந்ததை ஒப்புக் கொள்வாய்

அநுபல்லவி

வந்ததுவே சிவன் தந்ததென் றறிந்து
சிந்தை மகிழ்ந்தே தேறித் தெளிந்து (வந்ததை)

சரணம்

மட்டுப் படாத கவலையை யொழித்தும்
வையகந் தன்னில் மகிமை யளித்தும்
வெட்ட வெளிதனில் பம்பரம் போல
விசைகொண் டாடிடும் விமலனைக் கூடி (வந்ததை)

பாசபந் தமதை வேர்அறத் தாக்கிப்
பஞ்சப் புலன்கள் பறந்திடப் போக்கி
ஆசை கொண்டுவெகு நேச மதாக
ஐயன் திருவடி அனுதினம் நோக்கி (வந்ததை)

நல்லது கெட்டது நமக்கினி யில்லை
நாவுக்கு அறுசுவைக் கஞ்சியே தொல்லை
பல்லுயிர்க் கெல்லாம் பரமனே யிருக்கப்
பஞ்சமும் உண்டோ பயம்நமக் கேது (வந்ததை)

## பாடல் எண் : 8

பூத்திருக்குஞ் சோலையிலே ஏ தங்கம் - பூங்காவ னத்தருகே
காத்திருந்த பாவனையே தங்கம் கண்டுபிடிக்கவில்லை

ஏதுக்கு வந்தாரடி ஏ தங்கம் - இத்தலங்கள் பார்ப்பதற்கோ
மாதுசி ரோன்மணியே தங்கம் மாலையிட்டுப் பார்ப்பதற்கோ

வேடிக்கை பார்த்தாயோடி ஏ தங்கம் - விளையாடும் வேளையிலே
வேடிக்கை யாகுமோடி தங்கம் வினையமுள்ள பிரம்மவித்தை

கண்டு பிடிக்கவந்த ஏ தங்கம் - கண்ணனது வேலையடி
கண்டு பிடித்தாரோடி தங்கம் கன்னியிருப் பிடத்தை

முன்னால் தெரியுமோடி ஏ தங்கம் - மூட வுலகத்துக்குப்
பின்னால் தெரியுமடி தங்கம் பிரியமுள்ள வாசனைகள்

திருட ரறிவாரோடி ஏ தங்கம் - தீர்க்கமுள்ள பிரம்மவித்தை
அறிவுள்ள மானிடர்கள் தங்கம் அறிந்துகொள்ளச் சக்தியுண்டு

பார்க்க மறைவுமுண்டு ஏ தங்கம் - பார்த்திருக்கச் சோதியுண்டு
தீர்க்கமுள்ள மாதவர்க்கு தங்கம் தெரிசனங்கள் தோன்றுமடி

தேடிப்பிடிக்க வில்லை ஏ தங்கம் - தேசமெங்கும பார்த்ததில்லை
நாடி யிருக்கையிலே தங்கம் நாதனாக வந்தாரோடி

அற்புதக் காட்சியல்லோ ஏ தங்கம் - அவருடைய தெரிசனங்கள்
சொற்பெரிய மாதவர்க்கு தங்கம் சுயரூபந் தோன்றுமடி

ஆசையுள்ள கண்ணாட்டி ஏ தங்கம் - அறிவுள்ள சீமாட்டி
பாசக்கடல் கடந்தால் தங்கம் பரமபதம் சேரலாமே

எந்தன்குரு நாதா ஏ சாமி – யெனக்குரைத்த காரியங்கள்
அந்த முடிவல்லவோ சாமி ஆரறியப் போகிறார்கள்

புத்திகள் வந்ததையா ஏ சாமி – போதனைகள் செய்ததன்பின்
இத்தனை நாளாக சாமி எடுத்துரைப்பா ராருமில்லை

ஆசை யொழித்து விட்டேன் ஏ சாமி – அபிமானம் விட்டுவிட்டேன்
பாச மொழித்துவிட்டேன் சாமி பரமபதம் சேரவென்றே

சாலோக சாமீபம் ஏ சாமி – சாரூப சாயுச்சியம்
நாலு பதவியுண்டு சாமி நற்கதிகள் சேருதற்கே

காலங் கலிகாலம் ஏ சாமி – கலிக்குவந்த நாதனல்லோ
பூலோக முய்யுமென்று சாமி பூம்பறைகள் சாத்திவிட்டேன்

காணாத காட்சியெல்லாம் ஏ சாமி கண்டுகொண்டேன் இச்சமயம்
பூணாத பூண்டல்லவோ சாமி பொன்னடியைச் சார்ந்துவிட்டேன்...

## <u>பாடல் எண் : 9</u>

பல்லவி

என்றைக்கும் திருக்காட்சி தந்தருள் புரிவாயோ
ஏதும் யான் அறியேனே

அனுபல்லவி

இன்றைக்கு நாளைக் கென்றே
என் வாழ்நாள் போகுதையோ!

சரணம்

கன்றின் குரலைக் கேட்டுக் கனைத்து வரும் பசுப்போல்
என்றன் மொழியேற் றென்முன் இனிதுவந்தருள் வாயோ? (என்)

காணும் வடிவம் எல்லாம் கடவுள்நின் வடிவென்பார்
பூணும்மெய் யன்பில்லாத போய்யன் யான் அறிகிலேன் (என்)

அன்பால் அடியார்களை ஆண்டருள் நற்கருணை
என்பால் திரும்ப வேண்டும் என்றேழை வேண்டுகின்றேன் (என்)

இருள்சூழ் இருவினைகள் எனைவிட்ட கலு மாறே
அருள்சேர் ஒளி வழங்கி ஆனந்த அமுதூட்டி (என்)

## பாடல் எண் : 10

சற்குருதேவா - ஞான – சற்குருதேவா
சங்கடமெல்லாந் தவிர்ப்பாய் சற்குருதேவா (சற்)

ஆசைகள் மிகுந்த தையோ சற்குருதேவா - இவை
அகல்வதெப் போதோ சொல்வாய் சற்குருதேவா
மாசில்லாமல் என் மனதை சற்குருதேவா – நீதான்
மாற்றுவதெப் போதோ சொல்வாய் சற்குருதேவா (சற்)

எவ்வுயிர்க்கும் தொண்டு செய்ய சற்குருதேவா- சற்றே
இவ்வுடற்கு தெம் பளிப்பாய் சற்குருதேவா
செவ்வையுற நின்பெயரை சற்குருதேவா – யானும்
செப்பிக்கடைத் தேறவேண்டும் சற்குருதேவா (சற்)

பூமியில் பிறந்துவிட்டேன் சற்குருதேவா – தூய
புண்யமொன்றும் செய் தறியேன் சற்குருதேவா
காமக்குழி நின்றும் தூக்கி சற்குருதேவா – என்னைக்
காத்தருள வேண்டாமோ நீ சற்குருதேவா? (சற்)

உன்னடைக்க லமே யன்றோ சற்குருதேவா – என்றன்
உடல் பொருள் ஆவி யெல்லாம் சற்குருதேவா
நின்னையே நம்பியிங் குள்ளேன் சற்குருதேவா – மேலாம்
நிஷ்டையினைக் கூட்டி வைப்பாய் சற்குருதேவா (சற்)

சோதனைகள் செய்யலாமோ சற்குருதேவா – நின்றன்
தொண்டன் துன்ப மெய்த லாமோ சற்குருதேவா
பேதமின்றி யேயெங்கணும் சற்குருதேவா – பர
ப்ரம்மவொளி காணச் செய்வாய் சற்குருதேவா (சற்)

ஆன்மவொளி காணச் செய்வாய் சற்குருதேவா - ஒப்பில்
அன்பமுதை நல்கிடுவாய் சற்குருதேவா
மேன்மையை விளக்கி டுவாய் சற்குருதேவா - என்னை
மெய்ச்சுகத்தி லாழ்த்திடுவாய் சற்குருதேவா (சற்)

## பாடல் எண் : 11

பூதலத்தில் சிறந்த - பிறவியாம் புனிதமானிடசெனமமே
தீதிலாதிதையொணாமல் - மனிதர்கள் தீயநெறியில் புகுந்தே
சாதலும் சென்மித்தலும் - தொழிலாக சகடவுருள்போல் சுழன்றே
மாதுயர்ப்படுதல் நீக்க - சட்டமும் வகுத்த குருநாதா லாலி

ரத்தினக் குவியலாதி–பொருளெலாம் ரகவாரி மேவினாலும்
மெத்த எழிலான மடவார் குழுவினுள் வீற்றிருந்தாலும் இதயம்
சுத்தமாய்ப் பற்றில்லாமல் - திகழவே தூயநெறிநல்குதிறலோய்
வித்தகப் போதஞானப் - பலகைமேல் விழிதுயின் றருள்கலாலி

ணகரமே போல் எனுடலைத் திறனுற நன்றாய் வணக்கிஅருள்வாய்
அகமும் வாக்குச் செயல்களும் - தூய்மையாய் அமையத் திருத்தியருள்வாய்
இகமுடன் பரமுநல்கும் - நெறியினில் இனிதேநடத்தியருள்வாய்
சுகமெனும் துரியவெளியில் - தூங்காமல் தூங்குகுருநாதாலாலி

ஞான மார்க்கத்தையெளிதாய் - உயிர்கட்கு நல்கிடஉதித்ததேவா
தான தர்மங்கள் ஓங்கும் - இல்லறம் சன்மார்க்கமும் தருமென
ஊனமில்லா நெறியினைக் - கைக்கொள்ள உபதேசமொழிகள் அருளும்
மோனசற் குருமூர்த்தியே–தவமிகும் முனிராஜயோகிலாலி

நன்மையிது தீமையிதென அறியாமல் நரர்கள்படுதுயர் பொறாதே
புன்மை தவிர் நெறியை யார்க்கும் - தந்திடப் புனிதமனதோடு நோக்கிக்
கன்மனதும் நன்றுகரையத் - தக்கவழி காசினுக் கருளுமேலாம்
தன்மை நிறை ஞானமுனிவா- தூயஉப சாந்த ஸ்வரூபலாலி

குற்றமில் சாத்தனூரில் திருவருட் கொடியை நாட்டிய குருபரா
நற்றவத்தின் ஒளிமிகும் - பிள்ளையார் நகர்அருள் விலாச அன்னை
சுற்றமும் தாய் தந்தையும் - குருதெய்வம் துணையும் நீயென்று போற்ற
உற்றஅருள் நிலையைநல்கும் -நாதனே உயர்ஞான முனிவ லாலி

ருத்திரன் விஷ்ணு பிரமன் - சிற்சக்தி ரூபமெல்லாமும் எய்தும்
புத்தனொடு நபிநாயகன் - ஏசுவாய்ப் புவிமீதில் வந்து தோன்றும்
சித்தியொடு புத்திநல்கும் யாவுமாய்த் திகழ்பரப் பிரமம் ஒன்றே
தத்துவ விசாரமுறையால் - அறிகெனச் சாற்றுகுருதேவ லாலி

தேசுமிகு கோவைநகரில் - அன்புடன் திகழ்முத்துசாமி பிணியை
மாசிலாதகல ஓட்டி – அவரில்லில் மாண்புற அமர்ந்தமணியே
காசினியில் பலபதிகளில் - சென்றருளி கணபதிக் கோயில் நிறுவும்
தேசிகாரெட்டிப்பட்டி – நகர்வந்த சிவயோக முனிவ லாலி

வானவர்கள் முனிவர் மண்ணோர் - யாவரும் வணங்க அருள் பொழியும் நாதன்
ஞானகணபதி உருவையே அன்பர்கள் நாடித் துதிக்க வைத்தாய்
தீனரக்ஷகன் அருளினை எளிதிலே செவ்வயாய் எய்த வைத்தாய்
தேனெனப் போத அமுதை–உண்டுண்டு திகழ்மோன முனிவ லாலி

வாதபித்தம் ச்லேஷ்மமாம் - நாடிநோய் மாசில்நின் பெயர் சொல்லினும்
கோதிலா நீறுதீர்த்தம் - கொடுப்பினும் குணமாவதாச்சரியமோ?
ஓதுவெம் பிறவிநோயும் - விடைபெற்று ஓடுமெனில் நின்மகிமையும்
ஆதிமூர்த்தியின் மகிமையும் - பெரிதுகாண் ஆசார்ய ஸ்வாமிலாலி

## பாடல் எண் : 12

நல்லருள் புரிந்து மெய்மை நாட்டி இவ்வுலகத் தென்றும்
புல்லர்கள் இல்லாதுள்ள பொற்புறு தலைமை கண்டு
கல்லினும் வலியர் தாமும் கசிந்துளம் உருகச் செய்து
சொல்லுபதேசஞ் செய்த தூயவன் வாழி வாழி !

இரெட்டியப்பட்டி வந்து யாங்கனும் அருள் பரப்பி
அருட்டிற வள்ளலாரும் ஆண்டவன் ஆசி வாழி
மருட்கெடச் செய்தான் நம்மை மலவழி நீக்கி ஆண்ட
தெருட்டருஞ் செல்வன் நீதி சீர்பெறச் சிறக்க வாழி!

வாழி இவ்வுலகத் தென்றும் வள்ளல்தன் நியதியெல்லாம்!
வாழி இவ்வுலகிலன்னான் வளம்பெரு அடியார் யாரும்!
வாழி எந்நாளும் மெய்மை! வாழ்க நல்லறங்கள் எல்லாம்!
வாழி அப்பெரியோன் நாமம்! வாழியே வாழி வாழி!

வான்முகில் வழாது பெய்க மதிவளம் சுரக்க!
மன்னன் கோன்முறை அரசுசெய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க!
நான்மறை அறங்கள் ஓங்க! நற்றவம் வேள்விமல்க!
மேன்மைக்குள் சட்டநீதி விளங்குக உலகமெல்லாம்!

மேன்மைக்குள் அருட்சட்டநீதி விளங்குக உலகமெல்லாம் !
மேன்மைக்குள் தெய்வ அருட்சட்டநீதி விளங்குக உலகமெல்லாம் !

ஓம் ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமின் நமோநம: !!
ஓம் ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமின் நமோநம: !!
ஓம் ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமின் நமோநம: !!
ஓம்...ஓம்...ஓம்...

## GURU ARUTPA 2

The success of Guru Arutpa amongst the Devotees of Sri Reddiapatti Swamigal has prompted us to render the second edition of Guru Arutpa with the blessings of our beloved Guru Sri Reddiapatti Swamigal. 12 chosen songs which will fill your ears with a Divine experience. Sung with both Lead and Chorus, recorded with the support of percussion in a professional surrounding will delight you and other listeners. Play on and have a lilting moment....

### SONG LIST

1. Om Ganapathy..Om Ganapathy
2. Enthan Vinai Theerthavane
3. Paerum Oorum
4. Kobam Seyyathe
5. Reddiapatti Andavare
6. Eessa Enakku Varam Thaarai
7. Vandhathai Oppukolvai
8. Poothirukkum Solayile
9. Yendraikkum Thirukaatchi
10. Sathguru Deva
11. Boodhalathil (Laali Song)
12. Nal Arul Purinthu...

**SINGERS :**
Lead : Visaloor M. Ravi
Chorus :
Guru Rajesh,
Guru Prabhakaran,
Guru Ramkumar
Female : Ramya Sridhar

**ORCHESTRA :**
Mridangam :
Siva Subramaniam
Violin : Chandran
Morsing : Balu

SOUND ENGINEER : Stephen Raj
RECORDING STUDIO :
Royal Music Academy, Santhome, Chennai.